# சிவபூஜாதிகார வினாவிடை

**(தூத்துக்குடி சைவ சித்தாந்த சபா பிரசுரம்)**

**1. சிவபூசை என்பது என்னை?**

மனவாக்குக்கு எட்டாத பரமசிவத்தை அவைகளுக்கு எட்டியதாக ஒன்றில் பாவித்துப் பூசித்தல்.

**2. அச்சிவபூசை எத்தனை வகைப்படும்?**

ஆன்மார்த்தம், பரார்த்தமென இரு வகைப்படும்.

**3. ஆன்மார்த்த பூசை யென்பது என்னை?**

அது பக்குவமுள்ள சீடன் ஆசாரியராற் பாணலிங்க முதலிய வற்றிற் சிவபெருமானை விதிப்படி ஆவாகனஞ் செய்து கொடுக்கப் பெற்றுப் பூசிப்பது. அது பூசிப்பவனுக்கு மாத்திரம் பலனைக் கொடுப்பதனால் ஆன்மார்த்தமெனப்படும்.

**4. பரார்த்த பூசையென்பது என்னை?**

சுயமாக உற்பவித்ததும், கணங்களால் ஸ்தாபித்ததும், தேவர்களால் ஸ்தாபித்ததும், ரிஷிகளால் ஸ்தாபித்ததும், மானுடரால் ஸ்தாபித்ததுமாகிய சுயம்பு, கரணம், தைவிகம், ஆரிடம், மானுடம் என்னும் சிவலிங்களை அரசருக்கும், தேயத்தார்க்கும் போக மோக்ஷங்களுண்டாகும் பொருட்டுப் பூசிப்பது (அது பிறர் பொருட்டுப் பூசிப்பதனாற் பரார்த்தமெனப்படும்.)

**5. ஆன்மார்த்த பூசை செய்யும் அதிகாரமுடையவர் யாவர்?**

ஆசாரியர்களும் அவர்களாற் பெற்றுக் கொண்ட சீடர்க்ளுமாம்.

**6. பரார்த்த பூசை செய்யும் அதிகாரமுடையவர் யாவர்?**

பிரதம மகா சிருஷ்டியில் சதாசிவமூர்த்தியினுடைய ஈசான முதலிய ஐந்து திருமுகங்களின்றுந் தோன்றி அவராலே தீக்ஷை செய்யப் பெற்ற காசிபர் முதலிய ஐந்து ரிஷிகளுடைய கோத்திரத்திலே பிறந்த சிவத்விஜர்களுள்ளும், சமய தீக்ஷை, விசேட தீக்ஷை, நிருவாண தீக்ஷை, ஆசாரியாபிஷேகமென்னு நான்கு சமஸ்காரங்களும் பெற்ற ஆதிசைவப் பிராமணர்களே.

**7. பிரமதேவர் முகத்திலுற்பவித்த பிராமணர்கள், மேற் கூறிய சைவ சமஸ்காரம் பெற்றேனும் பெறாதேனும் பூசித்தல் கூடுமா?**

கூடாது; கூடாது; ஒருகாலுங்கூடாது.

**8. ஆதிசைவப் பிராமணர்கள் தாம் பூசிக்கலாமென்பதற்கும், ஏனைய பிராமணர்கள் பூசிக்கக் கூடாதென்பதற்கும் பிரமாணமென்னை?**

அநேக பிரமாணங்களுள்; அவற்றுட் சில ஈண்டு வருமாறு.

## பூர்வகாமிகே சிவார்ச்சநாவிதிப்படலே.

**பரார்த்தயஜனங்கார்யம்சிவவிப்ரேணநித்யச:**
**தார்மிக: கத்யதேநித்யமாதிசைவோத்விஜோத்தம:**
**அன்யேஷாம்ஸ்வார்த்தமேவம்ஸ்யாத்குர்யச்சேத்கர்த்ருநாசநம்**

(இதன் பொருள்) ஆதிசைவப்பிராமணர்களே எப்பொழுதும் பரார்த்த பூசை செய்ய வேண்டியது. ஏனெனில், அவர்கள் பிராமண சிரேஷ்டரென்றும், தார்மிகர்களென்றுஞ் சொல்லப்படுவார். மகா சைவர் முதலியோர் ஆன்மார்த்த பூசையே செய்யத்தக்கது. தனக்குரிய ஆன்மார்த்த பூசையையன்றிப் பரார்த்த பூசையுஞ் செய்வாராயின் செய்தவர் நாசத்தையடைவர்.

**சிவஸ்ருஷ்டிம்விநாயேதுஜாயந்தேப்ரம்மணோமுகாத்**
**தேஸாமாந்யாநதேசாந்துபரார்த்தேஜ்யாதிகாரிதா**
**யதிமோஹேனகுர்வீரன்ராஜ்ஞோராஷ்டருஸ்யநாசனம்.**

(இதன் பொருள்) சிவசிருட்டியினராகிய ஆதிசைவப் பிராமணர்களன்றி எவர் பிரமாமுகத்துப்பிறந்தவர் அவர் சாமானியர், அந்தச் சாமானியராகிய மகாசைவர் மோகத்தாலே பரார்த்த பூசை செய்வாராயின் அது அரசனுக்கும், நாட்டுக்கும் அழிவை யுண்டாக்கும்.

**சிவதீக்ஷாபிஷிக்தஸ்யசிவவிப்ரஸ்யதீமத**
**சிவாஜ்ஞாலசதஸ்தஸ்யபரார்த்தேஜ்யாநதோஷதா**

(இதன் பொருள்) சிவதீகைக்ஷ ஆசாரியாபிஷேகம் பெற்ற சிவப் பிராமணர்களுக்குப் பராத்த பூசை செய்யும்படி சிவபெருமான் விதித்திருத்தலினால் பரார்த்த பூசை முதலிய கிருத்தியங்கள் செய்தலினால் அவருக்குத் தோஷமில்லை.

## உத்தரகாமிகே ஆசார்யலக்ஷணாபிஷேஷூபடலே.

**ஆதிசைவகுலேஜாதச்ரேஷ்டஸ்யர்த்ஸ்தாபநாதிஷு**
**விப்ராதயச்சதுர்வர்ணாஅபியோக்யாஸ்ஸ்வகற்மணி**

(இதன் பொருள்) ஆதிசைவ மரபினராகிய சிவப்பிராமணர்கள் பிரதிட்டை முதலிய சர்வக்கிரியைகளுக்கும் அதிகாரிகள். பிராமணர் முதலிய மற்றைய நாலு வருணத்தவர்களும் ஆன்மார்த்தத்துக்கு மாத்திரம் அதிகாரிகள்.

**தீக்ஷாயாம்சர்வமர்த்யாநாம்ப்ரதிஷ்டாயாமதோத்ஸலே**
**ஸ்நபநேப்ரோக்ஷணேந்யத்ரபிராயச்சித்தாபிஷேசனே**
**வ்யாக்யாநாதௌச்சஸ்த்தஸ்யாத்ஸ்வார்த்தேவாதபரார்த்தகே**
**சர்வதேவார்ச்சநேவிப்ரஸ்த்வாதிசைவோகுருத்தம:**

(இதன் பொருள்) ஆதிசைவராகிய குரு உத்தமரே, தீக்ஷை, பிரதிட்டை, உற்சபம், ஸ்நபநம், புரோக்ஷணம், பிராயச்சித்தம், அபிஷேகம், சைவாகமபோதனை, ஆன்மார்த்தமாகவும் பரார்த்தமாகவுஞ் சமஸ்த தேவதைகளையும் பூசித்தல் முதலிய சகலகிரியைகளுக்கும் அதிகாரியாவார்.

**விசிஸ்டேவித்யமாநேதுஹம்ரதந்யேநகாரிதே**
**தேநராஜ்ஞோபவேத்தோஷோராஷ்ட்ரஸ்யாபியம்பவேத்**
**கர்த்ரு:காரயிதுச்சாபிகராமஸ்யாபிசதோஷக்ருத்**

(இதன் பொருள்) சிரேஷ்டராகிய சிவப்பிராமணரை நீக்கி மகாசைவரைக் கொண்டு பிடிவாதத்தினாலே கிருத்தியங்கள் செய்வித்தால் அந்நாட்டரசனுக்குப் பெருந் தோஷமுண்டாகும்; அந்தத் தேசத்துக்குப் பயமுண்டாகும்; செய்வித்தவனுக்கும் செய்தவனுக்கும் அநதக்கிராமத்துக்கும் பெருத்த கேடுண்டாகும்.

**(அந்யத்ரச)**

**முக்யத்வாதிஹசைவஸ்யமுக்யமகாத்ம்யதோபிச**
**அதிகாரோஸ்திஸர்வக்த்ரநாந்யேஷாம்சிவதர்சனே**

(இதன் பொருள்) ஆதிசைவனுக்கு முதன்மையிருத்தலானும் சிவமுகப் பெருமையானும் சிவ சாத்திரத்திலேயுள்ள சகலகாரியங்களிலும் அதிகாரமுண்டு. மகாசைவர் முதலிய பிறருக்கு அதிகாரமில்லை.

**தஸ்மாத்பரார்த்தமாத்மார்த்தம்ஸ்தாபநம்யஜநந்ததா**
**சிவவிப்ரேணகர்த்தவௌயமந்யேஷாம்ஸ்வார்த்தமேவச**

(இதன் பொருள்) ஆதலால் பரார்த்தமும் ஆன்மார்த்தமுமாகிய தாபனமும் பூசையும் சிவப்பிராமணராற் செய்யப்படுவது. மகா சைவர் முதலிய மற்றையோருக்கு ஆன்மார்த்தமே உரியது.

**பரார்த்தமபிகுர்யாச்சேல்லோபேநந்ருபதேஸ்ததா**
**தத்ராஷ்ட்ரஸ்யவிநாசஸ்ஸ்யாதசீரேணநஸம்சய:**

(இதன் பொருள்) அவர் அப்படியே பொருளாசையாலே பரார்த்தமுஞ் செய்வாராயின் அந்த நாட்டிற்கும் அரசனுக்கும் சீக்கிரத்தில் நாசமுண்டாம்; ஐயமில்லை.

## பூர்வகாரணே ஆசார்யலக்ஷணபடலே.

**ப்ரதமோனாதிசைவஸ்துஸசைவஸ்த்துஸதாசிவ:**
**ஆதிசைவோத்வீதியஸ்துசிவச்சைவஸ்ஸஉச்யதே**

(இதன் பொருள்) முதலாவது அநாதிசைவர்; அவர் சதாசிவமூர்த்தி. இரண்டாவது ஆதிசைவர்; அவர் சிவப்பிராமணர் என்று சொல்லப்படுவர்.

**ஆதௌஸதாசிவேநைவதீக்ஷிதாஸ்த்வாதிசைவகா:**
**குலேஷ்வேதேஷுஸம்ஜாதாஸ்தாபநாதிக்ரியார்ஜகா:**

(இதன் பொருள்) ஆதிசைவராவார், அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியால் முதலிற் றீக்ஷைசெய்யப் பெற்றவர். அவரது குலத்திற் பிறந்து தீக்ஷைசெய்யப் பெற்றவரே பிரதிட்டை முதலிய சகல கிரியைகட்கும் யோக்கியர்.

**ஆதிசைவாஸ்ரிதக:ப்ரோக்தோ மஹாசைவானுசைவக:**
**ஆத்மார்த்தயஜனம்குர்யாந் நகுர்யாத்துபரார்த்தகம்**

(இதன் பொருள்) ஆதிசைவரை யாசரித்தவர்கள் மகாசைவர், அனுசைவர், அவாந்திர சைவரென்று சொல்லப்படுவார்கள். அவர்கள் ஆன்மார்த்த பூசையைச் செய்யலாமே யல்லது பரார்த்த பூசை செய்தல் கூடாது.

**ஆதிசைவேனகர்த்தவ்யமா த்மார்த்தஞ்சபரார்த்தகம்**
**ஸ்தாபனம்யஜனஞ்சைவ ஆதிசைவார்ஹகம்விது:**
**க்ருதஞ்சேதந்யதாதத்து அபிசாராயசைவஹி**

(இதன் பொருள்) ஆதிசைவர்கள் ஆன்மார்த்த பரார்த்தமாகிய இருவகைப் பூசைகளுஞ் செய்யலாம். பராத்தப் பிரதிஷ்டை பூசை முதலிய கிரியைகள் ஆதிசைவருக்கே சிறப்பாகவுடையது. இக்கிரியைகளை மகாசைவர் முதலியோர் செய்தல் கூடாது. அவர் அக்கிரியைகளை செய்வாராயின் அது கொலைப்பொருட்டேயாகும்.

## ஸந்தாநாகமே

**ஆதிசைவேநகர்த்வ்யம் ப்றதிஷ்டாத்யற்சநாந்தகம்**
**அனயதாகாரயேத்யஸ்து அபிசாராயசைவஹி**

(இதன் பொருள்) பிரதிட்டை முதல் அர்ச்சனாந்தமாகிய சருவக்கிரியைகளும் ஆதிசைவராலேயே செய்யத்தக்கது. அவரைக் கொண்டன்றி வேறு வகையாகச் செய்வித்தால் அது கொலைப்பொருட்டேயாம்.

## ஹாலாஸ்யமஹாத்ம்யே ஸப்தமாத்யாயே

**மஹாலிங்கஸ்யபூஜார்த்தம்சிவஸ்ருஷ்டாந்த்விஜோத்தமாந்**
**கங்காதீரஸ்திதாந்தீரான்ஸமாஹூயமஹீபதி:**
**ஸித்தாந்தை: காமிகாத்யைஸ்சமஹாலிங்கம்நிரந்தரம்**
**பூஜையந்த்விதிஸம்ப்ரார்த்யவிர்திந்தேப்ய:ப்ரதாயச**
**தை:பூர்வம்காரயாமாஸமகாவிபவிஸ்தரை:**

(இதன் பொருள்) பாண்டியராசனானவன் ஆலயங்கட்டி முடித்துத் தனது பட்டணத்தில் மகா சைவர் முதலிய பல சைவர்களிருக்கவும் அவர்களைக் கொண்டு பரார்த்த பூசை முதலியவை செய்வித்தல் குற்றமென்றுணர்ந்து மகாலிங்க மூர்த்திக்குப் பூசை செய்யும் பொருட்டுக் கங்கைக்கரையில் வசிக்கும் சிவசிருட்டியினரும் பிராமண சிரேட்டரும் பண்டிதர்களுமாகிய ஆதிசைவரை வரவழைத்துத் திருவாலவாயின் கணணே எழுந்தருளியிருக்கும் மகாலிங்கமாகிய சொக்கலிங்கமூர்த்திக்குந் காமிகம் முதலிய சைவாகமங்களில் விதித்த விதிப்படி பூசை முதலியவை செய்து வரல் வேண்டுமென்று பிரார்த்தித்து அவர்களுக்குச் சீவனத்துக்கு வேண்டிய திரவியங்களையும் கொடுத்து அவர்களைக் கொண்டு மகாலிங்கத்துக்குப் பூசை முதலியவற்றைச் செய்வித்து வந்தான்.

## (திருவிளையாடற்புராணம்.) திருநகரங்கண்டபடலம்

**கைவரையெருத்திற்கனவரைகிடந்த**
**காட்சியிற்பொலிந்தொளிர்கோயின்**
**மைவரைமிடற்றுமதுரைநாயகரை**
**மரபுளியருச்சனைபுரிவான்**
**பொய்வரைமறையாகமநெறியொழுகும்**
**புண்ணியமுனிவரையாதி**
**சைவரைக்காசிப்பதியினிற்கொணர்ந்து**
**தலத்தினிற்றாபனஞ்செய்தான்.**

**9. மேற்கூறிய பிரமாண வசனங்களின் முக்கியமாகிய தாற்பரிய மென்னை?**

சிவாலயங்களிற் பிரதிட்டை செய்யப்பெற்ற சிவலிங்க முதலாகிய விக்கிரங்களை மேற்கூறிய இலக்கணம் பொருந்திய சிவத்து விஜராகிய ஆதிசைவப் பிராமணர்கள் தான் பூசிக்கலாமென்பதும், மற்றெவ்வகைப் பிராமணர்களும் பூசித்தல் கூடாதென்பதும், அதவா பூசித்தால் பூசித்தவர் நாசத்தை யடைவதோடு உலகத்துக்கும், அரசனுக்கும் பெருங்கேடு சம்பவிக்குமென்பதும், அவர் தீண்டி அசுத்தப்படுத்திய சிவலிங்காதி விக்கிரங்களையும், ஆலயங்களையுஞ் சிவத்துவிஜராகிய ஆதிசைவர்களாலே சிவாகமவிதிப்படி பிராயச்சித்தஞ் செய்து சுத்தப்படுத்தல் வேண்டுமென்பதுமேயாம்.

**10. மற்றைப் பிராமணர்கள் பூசித்தல் கூடாதாயினும், ஜகத் குருவென வழங்கப்பெற்று வரும் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளும் பூசித்தல் கூடாதா?**

கூடாது கூடாது ஒரு போதுங் கூடாது.

**11. ஏன் கூடாது?**

அவர்கள் சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களினின்றுந் தோன்றிய பஞ்சரிஷி கோத்திரத்திலுற்பவித்தவர்ளாகாமல் பிரமதேவர் முகத்திற்றோன்றிய பிராமண வம்மிசத்திலுற்பவித்தவர்களா யிருப்பதனாலென்க.

**12. அப்படியானால், இவ்வளவு சிரேஷ்டமுடைய ஆதிசைவப்பிராமணர்களை மற்றைப் பிராமணர்கள் தங்களினுந் தாழ்ந்தவர்களாகச் சொல்வதற்குக் காரணமென்னை?**

அவ்வாதிசைவர்களுக்குள்ள ஆதிக்கத்தைக் கெடுக்க வேண்டுமென்ற பொறாமையேயாம்.

**13. எதனால் மற்றைப் பிராமணர்களிலும் ஆதிசைவப் பிராமணர் உயர்ந்தவராவர்?**

பிரமதேவரினுஞ் சதாசிவமூர்த்தி எப்படி உயர்தவரோ அப்படியே பிரமதேவர் முகத்திலுற்பவித்த பிராமணரினுஞ் சதாசிவ மூர்த்தியின் முகத்திலுற்பவித்த ஆதிசவைப் பிராமணர் உயர்ந்தவராவர். அவருடைய மகிமையைச் சிவாகமங்கள் சிவ புராணங்கள், ஆதிசைவப்பிரபாவம் முதலிய அநேக நூல்களிற் காணலாம்.

**14. ஆதிசைவரென்னும் பெயர் எதனாலுண்டாகியது.**

பிரதம மகா சிருஷ்டி காலத்திலே அநாதி சைவராகிய சதாசிவமூர்த்தியின் றிருமுகத்தி லுற்பவித்து அவராலே தீக்ஷை செய்யப் பெற்ற காரணத்தாலேயாம்.

**15. அப்படியானால் சிவத்துவிஜரென்னும் ஆதிசைப்பிராமணர்களுக்குச் சதாசிவமூர்த்தியே குருவென்றும், அவர்களே மற்றெல்லா வருணத்தாருக்குங் குருவென்று மல்லவா ஏற்படுகின்றது. அப்படியிருக்கவுஞ் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை ஜகத்குருவென்று வழங்குவதென்னை?**

ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை ஜகத்குருவென்று சொல்வது உபசாரமாகுமேயன்றி உண்மையாகாது.

**16. எதனாலுண்மையாகாது?**

ஜகத் என்னும் பதம், சருவலோகங்களையு முணர்த்தலாற் சருவ லோகங்களினுமுள்ள தேவர் முதலாகிய யாவருக்கும், யாவைக்குங் குருவாதல் வேண்டும் அங்ஙனமாகாமையால் உண்மையாகாது.

**17. அற்றேல், ஜகத் என்னும் பதத்தைப் பூவுலகிலேற்றிப் பூலோகத்தி லுள்ளவர்கட் கெல்லாங் குரு எனக் கொள்ளலாகாதோ?**

இப்பூவுலகின் கண்ணும் மகம்மதியர், கிறிஸ்தவர், நாஸ்திகர், பவுத்தர், சமணர் முதலிய அளவிறந்த சமயிகளிருத்தலினாலும், ஒவ்வொரு சமையிகளும் தனித்தனி வெவ்வேறு குருவையுடையராயிருத்தலினாலும் அங்ஙனங் கொள்ளலாகாது.

**18. இனி “உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே” என்பதனால், ஜகத் என்னும் பதத்தை உயர்ந்தோர் மேலேற்றி, உயர்தோராகிய வைதீக சமயத்தவர் யாவருக்குங் குரு எனக் கொள்ளலாகாதோ?**

வைதிக சமயத்தவரும், சைவ, வைஷ்ணவ, ஸ்மார்த்த மாத்துவ முதலாகிய பல பிரிவையுடையராகி ஸ்மார்த்தரொழிந்த மற்றையரெல்லாந் தனித்தனி வெவ்வேறு குரவரையுடையராயிருத்தலால் அவ்வாறு கொள்ளுதலுமாகாது.

**19. ஸ்மார்த்தமதமே வேதாந்த மதமெனவும், ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளே வேதாந்த ஆசாரியரெனவும், மற்றை மதங்களெல்லாம் வேதாந்த மதத்துக்குள்ளடங்கியனவெனவும் கொண்டு ஜகத்குருவென்னும் பிரயோகத்தை ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கும் உண்மையாகக் கொள்ளலாகாதோ?**

கொள்ளலாகாது.

**20. எதனாற்கொள்ளலாகாது?**

வேதமானது பிருதுவி தத்துவ முதலாக நாததத்துவமீறாக முப்பத்தாறு தத்துவங்களையும், அவற்றின் சையோகப் பொருள்களையுந் தனித்தனி காலம் பிரமம், கருமம் பிரமம், பூதம் பிரமம், அன்னம் பிரமம் என இத்தொடக்கத்து வசனங்களாலே

முதலில் அசித்துவர்க்கங்களாகிய பாசத்தைப் பிரமமெனவும், நடுவில் சித்த சித்தாகிய பசுவைப் (சீவாத்மாவை) பிரமமெனவும், அந்தத்தில் சித்தாகிய பதியைப் (சிவத்தை) பிரமமெனவுங்கூறி அம்மட்டிலே உபசாந்தியடைந்து விட்டமையால், அது பதியாகிய சிவமே வேதாந்தப் பொருளெனவும், சிவசாயுச்சியத்தைக் கொடுக்கவல்ல சைவசமயமே வேதாந்த சமயமெனவும், அச்சமய சித்தாந்தப்படி சமய சிசேட நிருவாண தீக்ஷையும், ஆசாரிய அபிஷேகமும் பெற்றுப் பதி பசு பாசமென்னுந் திரி பதார்த்த வுண்மையை யுணர்ந்து உபதேசிக்குஞ் சைவாசாரியரே வேதாந்த குருவெனவும் அங்கீகரித்தற்குத் தக்க ஏதுவயிருத்தலால், இத்தகைய பெருமை வாய்ந்த சைவாசாரியர்களுக்கு ஜகத்குரு என்று வழங்கும் பிரயோகத்தை உண்மையாகக் கொள்ளலாமன்றி, வேதம் நடுவிலே பிரஸ்தாபித்து ஒதுக்கப்பட்டதும், ஆணவாதி மலத்திரயங்களிற் கட்டுண்டுழல்வதுமான சீவாத்மாவாகிய பசுவைப் பிரமமெனப் போதிக்கும் ஏகான்மவாத ஸ்மார்த்த சமய ஆசாரியர்களாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கு ஜகத்குரு என்று வழங்கும் பிரயோகத்தை உண்மையாகக் கொள்ளலாகாது.

**21. சைவசமய ஆசாரியர்களுக்கு வழங்கும் ஜகத்குருவென்னும் பிரயோகத்தை உண்மையாய்க் கொள்ளுதற்கும், ஸ்மார்த்த சமய ஆசாரியர்களாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கு வழக்ன்கும் ஜகத்குருவென்னும் பிரயோகத்தை உபசாரமாகக் கொள்ளுதற்கும் மேற்கூறிய நியாயங்களையன்றி வேறு நியாயங்களுமுண்டோ?**

உண்டு.

**22. அவை யாவை?**

சைவசமய ஆசாரியராகிய திருஞானசம்பந்த சுவாமிகளை

**"ஸ்வாமிந்ஸர்வஜ்ஞமந்நாதஜகந்நாதஜகத்குரோ"** எனவும்

**"பத்ராஸநம்ஸமாரோப்ய, பத்ராகாரம்ஜகத்குரும்"**

எனவும் வரும் வசனத்தால், ஜகத்குருவென்று ஆலாசியமும், அமிர்தேசுரரைப் பூசித்த ஆதிசைவசிவாசாரியரொருவரை

**"த்வம்ஹிலோககுரு:புஷ்பகிரிசந்தானஜீமஹாந்**
**சிஷ்யாநங்கீகுருக்ஷிப்ரம்யேதாநபீஸுதுக்கிதாந்**
**பவதாராதிதம்சம்புமமிர்தேசம்பௌகஸாம்**
**ஸேவ்யத்வாஸ்யவஸவிதேபரிசர்யாஞ்சகல்பய**
**யதாபலேயு:யேதேவைஸுசிநோதுக்கஸாகராத்**
**ததாத்வம்கிருபயாவித்வந்குருலோககுரூர்யத:"**

என்னும் வசனத்தால், கரந்தம் சங்கரசங்கிதை உபதேசகாண்டமுங் கூறு நூல் வழக்கமாயிருத்தலும், ஸ்மார்த்த சமய ஆசாரியர்களாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை ஜகத்குருவென்று அவர்கள் சீடர் வழங்க அதைக்கேட்டு உலகம் வழங்குகின்ற உலக வழக்கமா யிருத்தலுமேயாம்.

23. **ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை இவை போன்ற நூல்களில் ஜகத்குருவென்று வழங்கியிருப்பதில்லையா?**

இல்லை.

24. **இதுகாறுங் கூறிய நியாயங்களால் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் சிவாலயங்களில் வந்து பூசித்தல் கூடாதென்பதே சுருதி யுத்தி அனுபவங்களுக்கு ஒத்தாயிருக்கச் சில சிவாலயங்களில் வந்து பூஜித்திருப்பதாகத் தெரிகின்றதே அதற்குக் காரணம் யாது?**

அவ்வச்சிவாலயங்களிலுள்ள அர்ச்சகர்களாகிய ஆதி சைவர்கள் கல்வி செல்வம் ஜனக்கூட்டம் முதலியவற்றால் குறைவுரையராயிநுந்தமையும் மற்றைய ஜாதி சைவசமயிகளும் விதிவிலக்குகள் தெரிந்து கொள்ளாதவார யிருந்தமையும் சங்கராசாரிய ரவர்களுடைய சீஷர்களெல்லாம் செல்வாக்குடையவர்களா யிருந்தமையுமேயாம்.

25. **ஆதிசைவர்களல்லாத எவ்வகைப் பிராமணர்களுக்கும் அவர்கள் குருமாருக்குஞ் சிவால்ய பூஜை செய்யுமதிகாரம் இல்லாதிருக்கும் பக்ஷத்தில் சிதம்பராலயத்தில் தீக்ஷதர்கள் பூசித்து வருவதற்குக் காரணம் யாது?**

அந்த தீக்ஷிதர்களும் மற்றைய பிராமணர்களைப் போல பிரமதேவர் முகத்தி லுற்பவித்த பிரமசிருஷ்டாளாகாமல் ஸ்ரீ நடராஜ வள்ளல் திருக்கைலாயத்தினின்றும் சிதம்பரத்துக்கு எழுந்தருளுங்காலை அப்பெருமானுடன் வந்த சிவகணத்தலைவராகவும் அந்த நடராஜ வள்ளல் தாமும் அவர்களி லொருவரெனக் கூறப்பெற்றவராகவுமுள்ள பெருஞ்சிறப்பினையுடைய தில்லை மூவாயிரவரின் வம்சத்தவரா யிருத்தலால் அவர்கள் ஆதிசைவப் பிராமணரோடொத்த பெருமையுடையவரா யிருத்தலே.

26. **அப்படியானால் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை ஆதிசைவப் பிராமணர்கள் தங்களுக்கு குருவல்லவெனவும் தாங்கள் பூஜிக்கும் ஆலயங்களில் பூஜிக்க கூடாதெனவும் விலக்குவது போல் தீக்ஷதர்களும் விலக்குகின்றார்களா?**

ஆம்.

**27. அப்ப்டி விலக்கியிருப்பதற்கு ஆதாரமென்னை?**

சங்கராசாரிய சுவாமிகள் நால்வரி லொருவராகிய கும்பகோணம் சங்கராசாரிய சுவாமிகள் சிதம்பரம் சேர்ந்த காலையில் நடராஜ வள்ளலைத் தெரிசனஞ் செய்ய வேண்டுமென்றும் விபூதிப் பிரசாதத்தை தீக்ஷதாள் மடலோடு ஏந்தத் தாங்களெடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டதற்குக்கூட தீக்ஷதாள் தாங்கள் கொடுக்கவே கையேந்தி வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கூறு மறுத்து விட்டமையும் அதைப்பற்றி பெரிய சபை கூடி சாஸ்திர விவாதங்கள் செய்தும் முடிவில் தீக்ஷிதர்கள் கொடுக்கவே சங்கராசாரிய சுவாமிகள் வாங்கிக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டமையுமேயாம்.

**28. ஆதிசைவர்களல்லாத மற்றெவ்வகைப் பிராமணர்களுக்கும் அவர்களது ஆசிரியர்களுக்கும் சிவாலயங்களில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளைப் பூசிக்குமதிகார மில்லாவிடினும் அம்மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்யுங்காலத்தில் ஆசாரியராகவாவது சாதக ஆசாரியராகவாவது யிருந்து நடத்துவிக்கு மதிகாரமுண்டா?**

சிவாலய பிரதிஷ்ட்டையானது சிவாகம விதிப்படி செய்யுங் கிரியையா யிருத்தலானும் சிவப்பிரதிட்டாதி சிவாலய சம்பந்தமான சர்வ கிரியைகளுக்கும் ஆதிசைவர்களே அதிகாரிகளென்று சிவாகமங்களில் விஸ்தாரமாய்க் கூறியிருத்தலானும் கூடாது! கூடாது!!

## முடிவுரை

சைவசமயிகளே! இதுகாறுங் கூறிய சுருதியுக்தி யனுபவப் பிரமாணங்களால் சிவாலய சம்பந்தமான பிரதிட்டை பூசை முதலிய சகல கிரியைகளுக்கும் ஆதிசைவப் பிராமணர்களே அதிகாரிகளென்றும், மற்றெவ்வகை யோரும் அதிகாரிக ளல்லரென்றும், யாதேனுமோர் துர் அபிமானத்தை முன்னிட்டு மற்றையோரைக் கொண்டு சிவப்பிரதிட்டை பூசை முதலியன செய்யப்படின் உலகத்துக்கும் அரசனுக்கும் பெருங்கேடு சம்பவிக்குமென்றும் பசு மரத்தாணி போல நாட்டப்பட்டமையால் சைவாகம நெறிப்படி பூசிக்கப்படும் நமது தமிழ் நாட்டிலுள்ள சிவாலயங்களில் அத்தகைய தீங்கு நேரிடாவண்ணம் பாதுகாக்குமாறு உங்களனைவரையும் வேண்டுகின்றோம்.

திருச்சிற்றம்பலம்.